இந்திய யூனியன் சர்க்கார்

# ஆட்சிமொழி

## கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கை








இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி

தமிழ்நாடு கவுன்சில் வெளியீடு

விலை 6 ந.பை.

# இந்திய யூனியன் சர்க்கார் ஆட்சிமொழி

[26-7-60 அன்று சென்னையில் கூடிய இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற் குழு இந்திய யூனியன் சர்க்கார் மொழி குறித்த ஜனாதிபதியின் உத்தரவை விவாதித்து கீழ்க்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளது.]

1958-59 ஆண்டுகளில் இந்திய யூனியன் சர்க்கார் மொழி சம்பந்தமாக நாட்டில் காரசாரமான சர்ச்சை நடந்தது. மத்திய சர்க்கார் மொழியைப் பற்றிய பாராளுமன்றக் கமிட்டியின் அறிக்கை, பாராளுமன்றத்தில் விவாதிக்கப்பட்ட சமயத்தில் 1959 செப்டம்பர் 4-ந் தேதி பிரதமர் நேரு பார்லிமெண்டில் ஒரு உரை நிகழ்த்தினார். இந்த உரை, பிரச்சினையை சரியான முறையில் அணுகியதாக நாடு பூராவிலும் எல்லாப் பகுதி மக்களாலும் வரவேற்கப்பட்டது.

## பிரதமர் நேருவின் வாக்குறுதிகள்

அவ்வுரையில் இந்தியப் பிரதமர் திட்டவட்டமான இரண்டு வாக்குறுதிகளைக் கொடுத்தார்.

முதலாவதாக இந்திய அரசியல் சட்டத்தின் 363-வது பிரிவுப் பிரகாரம், 1965-க்குப் பிறகு இந்தி, இந்திய யூனியன் சர்க்காரின் மொழியாக ஆனபிறகும்கூட ஆங்கிலமும் மற்றுமொரு யூனியன் சர்க்கார் மொழியாக நீடிக்கும் இந்தி மொழி பேசாத மக்களின் சம்மதத்தைப் பெறாமல் இந்த நிலை மாற்றப்படமாட்டாது.

இரண்டாவதாக, மத்திய சர்க்காரின் உத்தியோகங்கள் சம்பந்தப்பட்டமட்டில் இந்தி பேசாத மக்களுக்கு எவ்வித பிரதிகூலமும் ஏற்படாமல் இருப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்படும். இந்தி மொழியில் தேர்வது என்பது இந்த உத்தியோகங்களில் சேர்வதற்கு வேண்டிய அவசியமான யோக்கியதாம்சமாகக் கருதப் படமாட்டாது.

இந்த உரையும் விவாதமும் முடிந்தபிறகு ஜனாதிபதி, மத்திய சர்க்காரின் நிர்வாக மொழி பற்றிய பாராளுமன்றக் கமிட்டியின் அறிக்கை மீது தனது உத்தரவை வெளியிட்டுள்ளார்.



## ஜனாதிபதி உத்தரவு

ஜனாதிபதியின் இந்த உத்தரவு கூறுவதென்ன?

1. எல்லா இந்திய மொழிகளிலும் உபயோகத்திற்காக

விஞ்ஞானம், நுண் தொழிலியற் சொற்களைக் கண்டு பிடிப்பது சம்பந்தமாக, கல்வி மந்திரிக் காரியாலயம் நடவடிக்கை எடுக்கவேண்டும். சர்வதேச வழக்கில் உபயோகப்பட்டுவரும் சொற்களையே, மிகச் சிறிய மாறுதலுடன் இதற்காக உபயோகிக்கவேண்டும்.

2. மத்திய சர்க்காருடைய காரியாலயங்கள் பல்வேறு பிரதேசங்களில் உள்ளன. இக்காரியாலயங்கள் ஸ்தலத்திலுள்ள மக்களுக்கு வசதிகளை அளிக்க வேண்டும்; அதாவது, பாரங்கள், (தபால், மணியார்டர் போன்றவை), பிரசுரங்கள் முதலியவைகளெல்லாம் ஸ்தல மக்களுக்குப் பிரதேச மொழிகளில் கூடுமானவரை, மிகப்பெரிய அளவில் கிடைக்கச் செய்ய வேண்டும்.

3. மேற்கூறிய ஸ்தலக் காரியாலயங்களில் வேலைசெய்யும் ஊழியர்களில் அந்தப் பிரதேசத்தை விட்டு வேறு பிரதேசங்களுக்கு மாற்றப்படாமல் இருக்கக்கூடியவர்கள் சம்பந்தப்பட்டமட்டில், அவர்களுடைய உத்தியோகங்களுக்கு ஆள் சேர்க்கும் முறையில் மாற்றம் செய்யப்படவேண்டும். அகில இந்தியத் துறையில் சேர்ககப்படும் முறைக்குப் பதிலாக, பிரதேசவாரியாகத் தேர்ந்தெடுக்கவேண்டும்,

4. பாராளுமன்றத்தில் இயற்றப்படும்சட்டங்கள் இந்தியிலும், பிரதேச மொழிகளிலும் மொழிபெயர்க்கப்படவேண்டும்.

5, உயர்நீதி மன்றங்களின் மொழி சம்பந்தப்பட்டமட்டில் தீர்ப்புகளும், உத்தரவுகளும் டிக்ரிகளும் இந்தியிலும், பிரதேசமொழிகளிலும் இஷ்டம்போல் வழங்குவதற்கு வேண்டி சட்டம் இயற்றப்படவேண்டும்.

ஜனாதிபதியின் உத்தரவில் உள்ள இந்த அம்சங்கள் எல்லாம் சரியான திசைவழியில் உள்ளன. ஆகவே, இவை வரவேற்கப்பட வேண்டியவையாகும்.

## உத்தரவின் குறைபாடுகள்

ஆயினும், 1959 செப்டம்பர் 4-ந் தேதியன்று பிரதமர் நிகழ்த்திய பிரசங்கத்தைக் குறிப்பிட்டு மத்திய சர்க்காரின் நிர்வாக மொழிப் பிரச்சினையை சர்க்கார் அணுகும் போக்கைப் பொதுவாக இப்பிரசங்கம் குறிக்கிறது' என்றுமட்டும் ஜனாதிபதி உத்தரவு கூறுகிறது. அவ்வுரையில் பிரதமர் கொடுத்த இரு வாக்குறுதிகளையும் சுட்டிக்காட்டி, அவை நிறைவேற்றப்படும் என்று ஜனாதிபதியின் உத்தரவு கூறவில்லை, இது வருந்தத்தக்கது.

"1965-ல் இந்தி மத்திய சர்க்கார் மொழியாகிய பிறகும், ஆங்கிலம் ஒரு உப மொழியாக இருக்கவேண்டும்" என்று பாராளுமன்றக் கமிட்டி செய்துள்ள சிபாரிசின் சாராம்சத்தை ஜனாதிபதியின் உத்தரவு குறிப்பிடுகிறது; ஆனால், இந்த நோக்கம் நிறைவேற்றப்படுவதற்காக அரசியல் சட்டத்தின் 363-வது பிரிவின் 3-வது உப பிரிவின் பிரகாரம் பாராளுமன்றத்தில் சட்டம் இயற்றப்படவேண்டும் என்று ஜனாதிபதியின் உத்தரவில் திட்டவட்டமான கட்டளை இல்லை.

நாட்டில் உள்ள இன்றைய நிலைமையில், இவ்வாறு சட்டம் இயற்றவேண்டியது அவசியமாகும் என்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ் நாடு கவுன்சிலின் செயற்குழு கருதுகிறது.

## பிரதேச மொழிக்கு உரித்தான இடம் இல்லை

இந்த உத்தரவில் மிகவும் கவலைக்கிடம்தரும் அம்சம் என்ன வெனில் மத்திய சர்க்காரின் உத்தியோகங்களுக்கு ஊழியர்களைப் பொறுக்குவது சம்பந்தமான பகுதியாகும். தற்போது இந்த உத்தியோகங்களுக்கு வேண்டிய பரீட்சைகள் ஆங்கிலத்தில் நடைபெறுகின்றன. இந்தியை சில காலத்திற்குப் பிறகு இப் பரீட்சைகளுக்கான ஒரு மாற்று மொழியாக்குவதற்கான நடவடிக்கைகளை சர்க்கார் எடுக்கவேண்டும் என்று ஜனாதிபதியின் உத்தரவு கூறுகிறது. அதே சமயத்தில், 'பிரதேச மொழிகளையும் இப் பரீட்சைக்கான மொழிகளாக்குவதில் பெரிய கஷ்டங்கள் உள்ளன" என்று ஜனாதிபதியின் உத்தரவு கூறுகிறது. இந்தக் காரணத்தைக்கூறி பிரதேச மொழிகளையும் பரீட்சை மொழிகளாக்குவது சாத்தியமா என்று ஆராய்ந்து பார்ப்பதற்கு ஒரு நிபுணர் கமிட்டியை அமைக்கக்கூட ஜனாதிபதி உத்தரவு மறுக்கிறது.

மத்திய சர்க்கார் உத்தியோகங்கள் சம்பந்தமாக, இந்தி மொழி பேசாத மக்களுக்கு எவ்விதப் பிரதிகூலமும் ஏற்படாதிருக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்று பிரதமர் நேரு கொடுத்த வாக்குறுதியை இது புறக்கணிப்பதாகும்.

இந்தி மொழி பேசாத அபேட்சகர்களுக்கு உடனடியாகப் பிரதிகூலம் ஏதும் ஏற்படாது என்றாலும், சர்வகலாசாலையில் ஆங்கில மொழிக்குப் பதிலாக பிரதேச மொழி போதனா மொழியாக ஏற்பட்டவுடன் இந்த நிலைமை மாறி, இந்த அபேட்சகர்களுக்குப் பிரதிகூலமான நிலைமை ஏற்படும் இந்த அபேட்சகர்கள் விரும்பினால் ஆங்கிலத்தில் பரீட்சைகள் எழுதலாம் என்ற வசதி இருந்தாலும் அவர்களுக்கு எவ்விதப் பயனும் இருக்காது. ஏனெனில் சர்வகலாசாலையில் அவர்களுக்குக் கல்வி எந்த மொழியில் போதிக்கப்பட்டதோ, அம்மொழியில்தான் அவர்கள் பரீட்சைகளை எழுத முடியுமேயல்லாது ஆங்கிலத்திலோ அல்லது இந்தியிலோ அல்ல.

## போதன மொழியின் முக்கியத்துவம்

உதாரணமாக, 1963-ம் ஆண்டிலிருந்து சென்னை ராஜ்யத்தி லுள்ள கலாசாலைகளில் பி. ஏ. வகுப்புகளுக்குத் தமிழிலேயே கல்வி போதிக்கப்பட வேண்டுமென்று சென்னை சர்க்கார் உத்தரவு பிறப்பித்துள்ளது. இவ்வாறு தமிழைப் போதன மொழியாகக் கொண்டு கல்வி பயின்று பி. ஏ. பட்டம் பெற்ற மாணவர்கள் மத்திய சர்க்கார் உத்தியோகங்களுக்கான பரிட்சைகளைத் தமிழில் அல்லது, இந்தியிலோ, ஆங்கிலத்திலோ எழுதவேண்டி வந்தால் அவர்கள் நிலை எவ்வளவு மோசமாயிருக்கும்! இதைச் சுலபமாக ஊகித்துக்கொள்ளலாம்,

எனவே, பிரதேச மொழிகளில் பரிட்சை எழுதுவதை அனு மதிக்காத ஜனாதிபதியின் உத்தரவு தமிழ் மக்களுக்கு மட்டுமல்ல இந்தி மொழி பேசாத எல்லா மக்களுக்கும் பிரதிகூலமாக முடியும்.

காங்கிரஸ் காரியக் கமிட்டி, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி, ஆகியவைகளின் தீர்மானங்களும், சென்னை சர்க்கார் நியமித்த சர்வகட்சிக் கமிட்டியும் மத்திய சர்க்காரின் உத்தியோகங்களுக்கான பரிட்சைகளை தமிழிலும் இதர பிரதேச மொழிகளிலும் எழுதுவதற்கு வசதி அளிக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருப்பது இங்கு குறிப்பிடத் தகுந்த விஷயமாகும். எனவே இதைச் சாத்தியப்படுத்தும் முறையில் ஜனாதிபதியின் உத்தரவு திருத்தப்படவேண்டும். மத்திய சர்க்கார் உத்தியோகங் களுக்கான தேர்வுப் பரிட்சைகளைப் பிரதேச மொழிகளில் எழுதுவ தற்கு வசதியளிக்கும் வகையில் திருத்தப்படவேண்டும் என்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழு கோருகிறது.

## ஆங்கிலமும் நீடிக்கும் சட்டம்

மேலும் 1965-க்குப் பிறகும் ஆங்கிலத்தையும் யூனியன் விவ காரங்களுக்கு உபயோகிப்பதற்கு வேண்டிய சட்டத்தைப் பாராளு மன்றத்தில் அரசியல் சட்டம் 363-வது பிரிவு, 3-வது உப பிரிவின் கீழ் கொண்டுவரப் போவதாக மத்திய சர்க்கார் பிரகடனம் செய்ய வேண்டும் என்றும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு கவுன் சிலின் செயற்குழு கோருகிறது. இப்படிப்பட்ட சட்டத்தைப் பற்றி ஜனாதிபதியின் உத்தரவில் திட்டவட்டமாக ஒன்றும் கூறாத தன் காரணத்தினால் எழக்கூடிய சந்தேகத்தைத் தீர்ப்பதற்கு இப்பிரகடனம் அவசியமாகிறது,

ஏற்கனவே குறிப்பிட்டதுபோல், இந்தக் கோரிக்கைகள் சென்னை சர்க்கார் நியமித்த சர்வகட்சிக் கமிட்டியின் சிபாரிசுகளை ஒட்டியவைகள் ஆகும். மேலும் சென்னை சர்க்கார் இந்தச் சிபாரிசு களை ஏற்றுக்கொண்டுள்ளது. இந்தக் காரணங்களினாலும், இக்

கோரிக்கைகள் இந்தி மொழி பேசாத சகல மக்களின் நலன்களுக்கு உகந்தவையாகயிருக்கின்ற காரணத்தினுலும் தமிழ் நாட்டில், உள்ள சகல கட்சிகளையும் இக் கோரிக்கைகளுக்காகத் திரட்டமுடியும் என்று இந்திய கம்யூனிஸ்டு கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழு பூரணமாக நம்புகிறது. அவ்வாறு மக்களைத் திரட்டுவதன் மூலமாகவும் ராஜ்ய சர்க்காரின் ஆதரவு இக்கோரிக்கைகளுக்கு கிட்டுவதன் மூலமாகவும் மத்திய சர்க்கார் இவைகளை ஏற்றுக்கொள்ளும்படி நிர்ப்பந்திப்பது முற்றிலும் சாத்தியம் என்றும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழு பூரணமாக நம்புகிறது. பிரதமர் நேரு ஏற்கனவே கொடுத்துள்ள வாக்குறுதிகளைக் கவனித்தால் இந்த சாத்தியப்பாடுகள் மிகவும் அதிகமாக உள்ளன என்பது தெளிவாகும்.

## தி. மு. க.வின் சிந்தனைக்கு

திராவிட முன்னேற்றக் கழகம் ஜனுதிபதியின் உத்தரவிற்கு எதிராகத் துவக்க உத்தேசித்திருக்கும் இயக்கம் இந்தி மொழியையே பொதுவாக எதிர்க்கும் தன்மை கொண்டதாக உள்ளது. இதனுல் ஜனுதிபதியின் உத்தரவு பிரதமரின் வாக்குறுதிகளுக்கு ஏற்பத் திருத்தப்படவேண்டும் என்ற கோரிக்கைகளுக்கு ஆதரவாகத் திரளக்கூடிய தமிழ் மக்களின் ஒற்றுமைக்கு இது குந்தகம் விளைவிக்கும். எனவே இது தமிழ் மக்களின் நலன்களுக்கு உகந்ததல்ல என்று இந்திய கம்யூனிஸ்டு கட்சி, தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழு கருதுகிறது. பிரச்சினையின் இந்த அம்சம் குறித்து திராவிட முன்னேற்றக் கழகம் உரிய கவனம் செலுத்தும் என்று இந்திய கம்யூனிஸ்டு கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழு நம்புகிறது.

## பிரதேச மொழி புறக்கணிப்பு

ஆட்சிமொழி பற்றிய பிரச்சினை நாட்டிலே இவ்வளவு மனக்கசப்பையும், காரசாரமான விவாதத்தையும் விளைவித்திருக்க வேண்டியதேயில்லை. சுதந்திரத்திற்குப் பின்பு, சர்க்கார் அனுஷ்டித்த கொள்கைதான் இந்த மனக்கசப்பிற்கும் சர்ச்சைக்கும் காரணம் என்பதே இந்திய கம்யூனிஸ்டு கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழுவின் திட்டவட்டமான அபிப்பிராயம்.

அந்தந்த ராஜ்யங்கள், அந்தந்த பிரதேச மொழியை அந்தந்த ராஜ்யத்தில் ஆட்சி மொழியாக ஆட்சி பீடத்திற்கு ஏற்றவேண்டும் என்ற மக்களின் அபிலாஷைகளை நிறைவேற்றுவதற்கு சர்க்கார் பயன்தரத்தகுந்த வகையில் நடவடிக்கைகள் எடுக்கவில்லை. உதாரணமாக, சென்னை சர்க்காரும், சென்னை சட்டசபையும் தமிழ் மொழிதான் சென்னை சர்க்காரின் ஆட்சிமொழி என்று பிரகடனம் செய்துவிட்டன. ஆயினும் சட்டசபைப் பிரசங்கங்கள் நீங்கலாக,

நடைமுறையில் ஆங்கிலந்தான் ராஜ்ய சர்க்காரின் ஆட்சி மொழியாக இன்றும் நீடித்து வருகிறது.

இந்த சூழ்நிலையில், பல நூற்றாண்டுகளாக தங்கள் ராஜ்ய மொழிகள் பிரிட்டிஷ் சர்க்காரினால் ஒடுக்கப்பட்டதை அனுபவித்த மக்களுக்கு ஆங்கிலத்தினால் தமிழ் நாட்டில் தமிழும் தமிழ் வளர்ச்சியும் எவ்வாறு அடக்கி ஒடுக்கப்பட்டதோ அதேபோல இந்தியினாலும் ஒடுக்கப்படலாம் என்ற சந்தேகங்கள் இருந்து வருகின்றன. இதுதான் இம்மனக்கசப்பிற்கும், சர்ச்சைக்கும் காரணமாகும்.

## தமிழ் ராஜ்ய-போதனா மொழியாக வேண்டும்

சர்வகலாசாலையில் ஆங்கிலம் போதனா மொழியாக உள்ள வரையில் ஆங்கிலத்தை ஆட்சிமொழி பீடத்திலிருந்து அகற்றும் பாதையில் தீவிரமான மாறுதல் ஒன்றும் ஏற்படமுடியாது. இது இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழுவின் திட்டவட்டமான அபிப்பிராயம். உயர்தரப் பள்ளிக்கூடங்களில் தமிழ் போதனா மொழியாக ஆகிவிட்டதனால் ஆட்சிமொழி சம்பந்தமான நிலையில் மாறுதல் ஒன்றும் ஏற்பட்டுவிடாது. இது சென்ற காலத்திய அனுபவம். பள்ளிக்கூடங்களில் தமிழ்மொழி போதனா மொழியாக ஆனதிலிருந்து, சர்வகலாசாலையில் ஆங்கிலம் போதனா மொழியாக நீடிப்பது சர்வகலாசாலை மாணவர்களுக்குக் கஷ்டத்தைத்தான் உண்டுபண்ணுகிறது. திடீரென்று ஒரு அந்நிய மொழியில் கல்வி கற்கும்படி கல்லூரி மட்டத்தில் நிர்ப்பந்திக்கப்படுகிறது. இதனால் ஏற்படும் விபரீதங்கள் பல.

இதனால், இறுதியாகப் பரிசீலனை செய்து பார்க்குமிடத்து, சர்க்காரின் நிர்வாக மொழி, நீதி ஸ்தலங்களின் மொழி, சட்டசபை மொழி, சட்டங்கள் இயற்றப்படும் மொழி முதலியவைகளெல்லாம் சர்வகலாசாலையின் போதனா மொழியிலிருந்தும், தேர்வு மொழியிலிருந்தும் பிரிக்கமுடியாதவாறு இணைக்கப்பட்டுள்ளது

## முடிவுகள் நிறைவேற்றப்படாதது ஏன்?

நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பே, 1939 மார்ச் மாதத்தில் இந்திய சர்வகலாசாலைகள் மகாநாட்டில் இது சம்பந்தமாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. "இந்த மகாநாட்டின் அபிப்பிராயத்தில், பி. ஏ. வகுப்பு உட்பட கல்வியின் எல்லாக் கட்டங்களிலும் கூடுமானவரையில் போதனா மொழி மாணவர்களின் தாய் மொழியாக இருக்கவேண்டும்" என்று அத்தீர்மானம் கூறிற்று.

சுதந்திரத்திற்குப் பின் சர்வகலாசாலைகளின் உப அத்தியட்சகர்களைக்கொண்ட ஒரு கமிட்டி நியமனம் செய்யப்பட்டது. 1948-க்குப் பின் 5 ஆண்டுகளுக்குள் ராஜ்ய, மாகாண அல்லது பிர

தேச மொழியை சர்வகலாசாலைகள் போதனு மொழியாக ஏற்க வேண்டும் என்றும் 1948-க்குப் பின் இந்த ஐந்தாண்டுகள் முடிந்த வுடன் ஆங்கிலம் போதனுமொழியாக இருக்கக் கூடாதென்றும் இக்கமிட்டி சிபாரிசு செய்தது.

1949-ல் சர்க்கார் நியமித்த சர்வகலாசாலைக் கல்விக்கமிஷன் இப் பிரச்சினையை சரியான முறையில் அணுகிற்று. அது கூறிய தாவது: "கல்விக் கண்ணேட்டத்தைக்கொண்டு பார்த்தாலும் சரி, ஜனநாயக சமூகத்தின் பொது நலன்களைக்கொண்டு பார்த்தாலும் சரி—கல்வி, பிரதேச மொழியின் மூலமாகவே இருக்கவேண்டியது அவசியம். பிரதேச மொழியில் கல்வி பயில்வது, மக்களுடைய மாகாண நடவடிக்கைகளுக்கு அவசியம் என்பது மட்டுமல்ல, இவ்வாறு கல்வி பயில்வது அவர்களுடைய இலக்கியத்தைச் செழுமைப்படுத்தவும், கலாசாரத்தை வளர்க்கவும் உதவும். பிரதேச மொழியில் கல்வி பயில்வதுதான் இயற்கை. இவ்வாறு இயற்கையாகக் கல்விபயின்ற மக்கள் கல்வியிலும், கற்பனையிலும் உயர்ந்த மட்டங்களை எய்துவது சாத்தியமாகும்? ஆராய்ச்சிக்கும் அறிவின் எல்லையை விஸ்தரிப்பதற்கும், பலமானதொரு ஆக்கத்தை அவர்கள் கொடுக்கமுடியும். மத்திய சர்க்காருடைய மொழியில் தேவையான அறிவைப்பெற்று, இந்த மாணவர்கள் அகில இந்திய ஸ்தாபனத்தில் சேர்வதிலும் எவ்விதக் கஷ்டமும் இராது; மாகாணங்களிலுள்ள படிப்பாளிகளும் அதைப் புரிந்துகொண்டு போதனை யளிப்பதில் சிரமமிருக்காது".

மேற்கூறிய திட்டவட்டமான, சந்தேகத்திற்கிடமில்லாத சிபாரிசுகள் நிறைவேற்றப்பட்டிருந்தால், 1958-லிருந்து ஆங்கிலம் சர்வகலாசாலைகளின் போதனு மொழியாக இருக்கும் ஸ்தானத்திலிருந்து பூரணமாக அகற்றப்பட்டிருந்தால் தமிழும், மற்ற பிரதேச மொழிகளும் ஏற்கனவே நடைமுறையில் ராஜ்ய சர்க்கார்களின் எல்லா நிர்வாகத்துறைகளிலும் நிர்வாக மொழியாக ஆகியிருக்கும்.

இங்கிலையில், மக்கள் தமிழ்மொழியை எம்மொழியும் நசுக்கி விட முடியாது என்பதை நடைமுறை அனுபவத்தின் மூலமாகப் பார்த்திருப்பார்கள். அங்கிலையில் இந்திய யூனியன் சர்க்காரின் மொழிப் பிரச்சினை, ராஜ்யங்களிடையே தொடர்பு மொழிப் பிரச்சினை, பன்மொழி பேசும் ஒரு தேசத்தின் நடைமுறைத் தேவை என்ற நோக்குடன் பார்க்கப்பட்டிருக்கும். அப்படி இருந்திருக்குமேயானல், இப்பிரச்சினை சம்பந்தமாக இம்மனக் கசப்பும், சர்ச்சைகளும் எழுந்திருக்காது.

துரதிருஷ்டவசமாக, நாட்டின் ஜனநாயக அபிப்பிராயத்திற்கு முற்றிலும் உகந்திருந்த, மேற்கூறிய கல்வி அதிகாரிகளைக்கொண்ட கமிட்டிகளின் சிபாரிசுகள் நிறைவேற்றப்படவில்லை. அதுமட்டுமல்ல, சர்வகலாசாலையில் ஆங்கில மொழிக்குப் பதிலாகப் பிரதேச

மொழி போதனு மொழியாக இருக்கலாமா, கூடாதா என்று பல ஆண்டுகளுக்கு முன்பே தீர்ந்துபோன சர்ச்சை சுதந்திரம் பெற்று 12 ஆண்டுகளுக்குப் பின், மீண்டும் தலைதூக்கியுள்ளது. கல்லூரி மட்டத்திலும் தமிழை போதனு மொழியாக்க சர்க்கார் தயங்கித் தயங்கி எடுக்கும் நடவடிக்கைகளுக்குக்கூட, கல்வி ஸ்தாபனங்களின் ஆதிக்கம் வகிக்கும் பிற்போக்கு சக்திகளிடமிருந்து பலமான எதிர்ப்பு கிளம்புகிறது,

## தமிழை வளர்க்கத் தயக்கமா?

உதாரணமாக, சென்னை சர்க்கார், காலந்தாழ்த்தி சமீபத்தில் ஒரு உத்தரவு பிறப்பித்துள்ளது. 1963-ம் ஆண்டிலிருந்து இந்த ராஜ்யத்தில் உள்ள கலாசாலைகளில் பி. ஏ. வகுப்புக்களில் (விஞ்ஞானங்கள் தவிர இலக்கியம், சரித்திரம், தத்துவம், கலை முதலிய பாடங்களுக்கு) தமிழ்மொழி போதனு மொழியாக இருக்கவேண்டு மென்பதே அந்த உத்தரவு. இதற்குத் தயார் செய்வதற்காக, கோவையில் உள்ள சர்க்கார் கலாசாலையை ஒரு தயாரிப்புக் கலாசாலையாக மாற்றி அதில் இவ்வாண்டிலிருந்தே தமிழ் போதனு மொழியாக்கப்பட்டுள்ளது. இந்த சாதாரண நடவடிக்கையும், சென்னை சர்வகலாசாலையின் துணைத் தலைவரும், இன்னும் கல்வித் துறையில் ஒட்டிக்கொண்டிருக்கும் சில பிற்போக்கு சக்திகளும் பலமாக எதிர்க்கின்றனர். இந்தப் பிற்போக்கு சக்திகளுக்கு சர்க்கார் தொடர்ச்சியாக விட்டுக்கொடுத்து வருகிறது. இதை சென்னை நிதியமைச்சரின் பல சமீபகால அறிக்கைகளில் காணலாம். 1963 லிருந்து தமிழ் மொழியைப் போதனு மொழியக்குவதற்கான திட்டத்திற்கு தயாரிப்புத் திட்டமே கோவைக் கல்லூரித் திட்டம் என்று ஆரம்பத்தில் நிதியமைச்சர் கூறினர். இந்த நிலையை உறுதியாகக் கடைப்பிடிப்பதற்கு பதிலாக கோவை கல்லூரித் திட்டம் எந்த அளவு வெற்றி அடைந்தது என்பதை கணக்கிட்டுப் பார்த்து தான் தமிழ் போதனு மொழியாக்கப்படும் திட்டம் விஸ்தரிக்கப் படும் என்று அதே அமைச்சர் எதிர்ப்பிற்குப் பின் கூறியுள்ளார். அதே சமயத்தில், ஆங்கிலத்தின் தரம் குறைந்துவிட்டது என்ற குற்றச்சாட்டிற்குத் தலைவணங்கி 5-வது வகுப்பிலிருந்து ஆங்கிலம் பயில்வதைக் கட்டாயப்பாடமாக ஆக்கியுள்ளார்.

இந்நிலை நீடித்திருப்பது தமிழ் நாட்டின் ஜனநாயக வளர்ச்சியைத் தடைப்படுத்துகிறது. ஏனெனில் பொருளாதார வளர்ச்சிப் பிரச்சினைகள் சம்பந்தமாக நாட்டில் நடக்கும் பல்வேறு சர்ச்சைகளில் சாதாரண தமிழ் மக்கள் விஷயஞானத்துடன் பங்கெடுத்துக் கொள்வது அறவே இயலாது போகிறது. ஏனெனில், இப்பிரச்சினைகளைப் புரிந்துகொள்ளத் தேவைப்படும் விஞ்ஞான பொருளாதார அறிவு, தமிழில் போதிக்கப்படாமல் ஆங்கிலத்தில் மட்டும் இருப்பதால் அவர்களுக்கு எட்டாக் கனியாகவுள்ளது.

## தமிழை உறுதிப்படுத்த ஒன்றுபடுக

எனவே இந்நிலையில் தமிழ் மக்களின் முன் உள்ள ஆபத்து தமிழ்மொழி இந்தி மொழியால் நசுக்கப்படும் என்பதல்ல; ஆனால் ஆங்கிலம் சர்வகலாசாலையின் போதனா மொழியாக நீடித்து இருப்பதன் காரணமாய், தமிழ்மொழி ஆட்சிமொழி பீடத்திற்கு ஏறுவது தடைப்படும் அபாயம்தான் தமிழ் மக்களின் முன்புள்ளது என்று இந்திய கம்யூனிஸ்டு கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழு உறுதியாகக் கருதுகிறது.

தமிழ் மக்களின் உள்ளத்திலும், ஏனைய இந்திமொழி பேசாத மக்களின் உள்ளங்களிலும் தொக்கி நிற்கும் சந்தேகங்களைப் போக்குவதற்காக வேண்டி, ஏற்கனவே குறிப்பிட்டவகையில் ஜனாதிபதியின் உத்தரவு திருத்தப்படவேண்டும் என்பதை செயற்குழு மீண்டும் வலியுறுத்துகிறது. அதே சமயத்தில் தமிழ்நாட்டில் ஆங்கில மொழியைப் போதனா மொழி என்ற ஸ்தானத்திலிருந்து, அகற்றி தமிழ்மொழியை சர்வகலாசாலைப் போதனா மொழியாக்குவதற்கு கல்வி ஸ்தாபனங்களில் பலமாக வேரூன்றியுள்ள பிற்போக்கு சக்திகள் காட்டிவரும் எதிர்ப்பை முறியடிப்பது உடனடித் தேவையாகிவிட்டது. இதற்காகவேண்டி மக்களின் சக்தியைத் திரட்டுவது, நாட்டிலுள்ள ஜனநாயகக் கட்சிகள், ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் உடனடியான, தலையாய கடமை என்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு கவுன்சிலின் செயற்குழு திடமாக வலியுறுத்துகிறது.

இக்கடமையை நிறைவேற்ற கம்யூனிஸ்ட் கட்சி எல்லா கட்சிகளோடும், ஸ்தாபனங்களோடும் ஒன்று சேர்வதற்குத் தயாராகவுள்ளது. இவ்வாறு ஒன்றுசேர முன்வருமாறு தமிழ்நாட்டிலுள்ள கட்சிகளையும், ஜனநாயக ஸ்தாபனங்களையும் நண்பர்களையும் கம்யூனிஸ்ட் கட்சி பணிவன்புடன் வேண்டிக்கொள்கிறது.



ஜனசக்தி பிரஸ், சென்னை 1.